# ஐந்தாவது

# கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த விளக்கம்.

---

வெண்பா.

*இந்தவா றாய்ச்சியினி லென்று மிருப்புளதாச*
*சிந்தை வியாபகமே சேர்ந்தொளிரும் - வந்த*
*பரிபா கிகளாகப் பாவுதடையோர்க் கொன்றுந்*
*திரா அல்லார்க் கொவ்வாதித் தேன்.*

எங்ஙனமெனின், முன்னூன்று ஆராய்ந்த ஆராய்ச்சிக் கண் ணியேயதம் அறியாமையையும், தோயபட்டு அறிவா யுமெழுந்தவ. எழுந்த இச்சிரண்டில், தோயபட்ட அவ்வறி வெனுமதுவெப்பதும் கிடையந்தா? அன்றி இடையாந்தா? இடைமந்திதலின், அஃது எத்தகைய தெனப்படும்? வியா பகமாயும், விளக்கமாயும், உபாதான காரணமாயும், நித்திய மாயும், சாட்சியாய் இருக்கின்றதன்றே? தானென்பதற்குப் பொருள் இங்ஙனமாயிருக்கின், அஃது தன்னையறியும் அறி வென்பதற்கு முரணென விருக்கின்றது? இங்ஙனமாகிய தன்னையும் அயலையும அறிவதே அறிவென்போமெனின், அயலை அறியு மவசரம் அறியாமையாகிய சிதாபாசனும், தன்னை மேற்கூறியபடிண்ணம் அறிவது அறிவெனவு மாகின் றதே! எங்ஙனம் அயலையும் தன்னையும் அறிவதை அறிவெ னப்படும்? சோபாதிகமென்றும் நிருபாதிகமென்றும் இரண் டிருக்கின்றன. இவற்றுள் சோபாதிகமென்பது, ஏகதேச மாக நின்றுணர்வது. நிருபாதிகயென்பது, நிறைவாக நின் றுணர்வது. ஏகதேசமாய் நின்றுணர்வதென்பது, இத்தேகத்

துணையாய் நிற்பது. இங்ஙனம் நின்றுணரு மனுபவம் கற்பனையா? அன்றி யதார்த்தமா? சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், உலகென்பது சமட்டியும், உடலென்பது வியட்டியுமாயிருக்கின்றன. சமட்டியாகிய உலகம தோன்றியதொன்று வியட்டியாகிய இவ்வுடலும் தோன்றுவானேன்? அச்சமட்டியாகிய உலகம் தோன்றும்தொன்று வியட்டியாகிய இவ்வுடலும் தோன்றுமற் போவானேன்? இவ்வுடல் உலகப்பொருளன்றாயின், அவ்வுலகோடு தோன்றி மறையவேண்டுவதின்று. தோன்றி மறைதலால் இவ்வுடல் உலகப்பொருள் என்பதற்கு முரணின்று. சமட்டியும் வியட்டியும ஒருங்கே காணப்படுதல் சகலாவத்தையும், ஒருங்கே மறைதல் கேவலாவத்தையு மாகின்றன. இவ்விரண்டவத்தைகளையும அறிகின்றது யாதெனப்படும்? நாமன்றோ? நாம் எங்கிருந்து இவற்றை அறிகின்றனம்? இவ்வுடலின்கணிருந்து அறிகின்றனமெனின், இவ்வுடல் சதுர்பூதங்களையன்றி யோர் முதலாயிருக்கட்டுமே? தோற்றல் மாத்திரமாயும் சொல்மாத்திரமாயு மிருக்கின்றதே! தோற்றல் மாத்திரமாகத் தோன்றும் தோற்றத்தில் நின்றறிகின்றனமென்பது, கானலிற் றோன்றும் நீரில் நின்று அருந்துதல் முதலிய பலகிரியைகளை புரிகின்றோமென்பதுபோ லாகின்றது. அக்கானல் நீர் அருந்துதல் முதலிய அனுபவங்கட்கியையாததை இதற்குவப்பிடலாமோவெனின், அனுபவத்துக் கியைந்தது யதார்த்த மாக்குமே! அங்ஙனமாயின், கடபட முதலிய அனுபவங்களைப்போல் இருக்கவேண்டுமாக்கும்! அக் கடபட அனுபவங்களில் மட்பொருளும் நூற்பொருளும் அவற்றைவிட்டு அகன்றிருக்கின்றன தாக்கும்! அங்ஙனம் நீங்கியில்லையே! அங்ஙனம் நீங்கி இருந்தாலன்றோ அக் கடபடங்கள் அனுபவத்துக் கியையும்? இருப்பது மட்பொருளும் நூற்பொருளுமாகலின், பிடித்தல் எடுத்தல் முதலிய அனுபவங்களுக் கியைகின்றன. கடபடங்களின்றி மட்

பொருளும் நூற்பொருளும் அனுபவப் படட்டுமேயெனின், அம்மட்பொருளும் நூற்பொருளுமின்றிக் கடபடங்கள் அனுபவப்படட்டுமே. அன்றியும்,மட்பொருளும் நூற்பொருளும், யாவரும் வந்திப்பதற்குத் தேவதாபிம்பமாகவும், திருமங்கிலியத்துக்குச் சரடாகவும் அனுபவப்படும் ஞான்று கடபடங்களுண்டா? இல்லையன்றே? கடபடங்கள் அனுபவப்படும் ஞான்று மட்பொருளும் நூற்பொருளுமின்றே? இருக்கின்றதால், அனுபவபாதிதல் என்னை? மட்பொருளும் நூற்பொருளுமன்றே? ஆகலின், கடபடானுபவங்கள் தோற்றல் மாத்திரமும் மட்பொருள் நூற்பொருளானுபவங்கள் யதார்த்தமுமாயிற்றென்க. இம்மட்பொருள் நூற்பொருள் போன்ற மன்னுதிச் சுயம்பூதத்தையன்றி உடலென்பது எங்ஙனம் பொருளாயிருக்கலாகும்? தோற்றல்மாத்திரமாயிருக்க நாம் இதற்கிலிருந்தாலு எங்ஙனங் கூடும்? கூடாமையால், இச்சம்பந்த விபட்டுக் தோற்றங்களையும், அதை மறைத்தலையும் எங்கிருந்து தவிர்ப்பனம? இம்மயக்க மருவழி, நாமிருந்தற்கிடமும் நமது யதார்த்த நிலையும் எங்ஙனம் வெளிப்படும்? இதுநிற்க,

அவத்தாத்திரயங்கள் மாறுகின்றனவா? அன்றி நாம் மாறுகின்றனமா? நாம் மாறுகின்றனமெனின், நாம் மாறுகின்றதை மாறுதிருந்து அறிகின்றது யாது? நாமே அறிகின்றனமெனின், நாம மாறுகின்றனமன்று. நம்பால் மாறுகின்றனவெனின், நம்மையன்றி வியாபகப்பொருளியாது? வேறின்றாகலின், நாமென்பது யாதோ அது வியாபகப் பொருளென்பதற்கு முரணின்று. அன்றியும், எது இவ்வவத்தைகளாக மாறுகின்றது? நாமெனன்பதன்று, அறியாமையெனின், அவ்வறியாமை நாமெனன்பதையன்றி இதுகாறும் உண்டெனப்பட்டதா? இல்லையே? இல்லையாயின் அறியாமையாகிய

இவ் வவத்தாத்திரயங்களுக்கு உபாதானகாரணமு மியாது? வேறின்றாகலின்? நானென்பதே.

அன்றியும், இவ்வவத்தாத்திரயங்கள் மாறினும், நானென்பது என்றுமொன்றேனும மாறினதுண்டா? இன்றாகலின், மாறும் அவத்தாத்திரயங்கள் அநித்தியமாகின்றன. ஆகின்றதால், மாறாதிருக்கின்றது நானென்பதாகலின், நானென்பதையன்றி நித்தியமென்பதியாது? வேறின்றாகலின், நானென்பதே நித்தியமென்பதற்கு முரணின்று. அன்றியும், இவ்வவத்தாத்திரயம் விளங்குகின்றது எப்பொருளினாலாகிய விளக்கத்திலேயாம்? சோமசூரியாக்கினி விளக்கத்தினாலெனின், சொப்பனமும் சுழுத்தியும் எவ்விளக்கத்தினால் விளங்குகின்றன? தற்பிரகாச விளக்கத்தாலன்றோ? அவ்விரண்டவத்தைகளினும் நானென்பது ஒளிவடிவாயிருக்க, சாக்கிரமென்னும் இவ்வவத்தையைத் தான் ஒளிபின்றியிருக்குமோ? இவ்வவத்தைகட்கு நானென்பது ஒளிவடிவாயின், சோமசூரியாக்கினி வேண்டுவதின்றேயெனின்: திரிகாலஞானிகளுக்குச் சோமசூரியாக்கினி உதவியிருக்கட்டுமே? அவர்களுக்குத் திரிகாலமாகவேயெனின், அந்தஞானம் துவைதகால்வரினும் விளக்கம் யார்பாலது? அங்கேயும், நானென்பதன்பாலதன்றோ? ஆகலின், நானென்பது விளக்கவடிவமென்பதற்கு முரணின்று. அன்றியும், இவ்வவத்தாத்திரயங்களை ஒருங்கே நித்தியமாயிருந்து அறிந்துகொண்டுவருகின்றமையின் நானென்பதையன்றிச்சாட்சியென்பதியாது? சாட்சியென்பது விலட்சணமாக நின்றுணர்வதே, வேறின்றாகலின், நானென்பது சாட்சிப்பொருளென்பதற்கு முரணின்று. நானென்னும் அறிவு இலக்கியப்பொருளாயிருக்கின்றதால், அதற்கிலக்கணமோ அனந்தமாயிருக்கின்றன. இருக்கினும் இவ்வவத்தாத்திரயங்காரணமாக வெடுத்துக் காட்டியது வியாபகமுதலிய பஞ்ச இலக்கணங்

களை யென்க. இவ்விலக்கணங்கள் அகம்பொருளுக் குண்டாக வின், இந்நிலை அகத்தாராய்ச்சி விளக்க மெனப்படுமா? அன்றிப் புறத்தாராய்ச்சி விளக்கமெனப்படுமா? புறத்தாராய்ச்சி விளக்கமன்று அகவிளக்கமாகலின், இவ்விளக்கமே கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த மெனப்படுமன்றோ? கூடமென்பது இரகசியப்பொரு ளெனப்படுமென்க. இஃதில் இன்னுமையமுளதேற் கூறுதும். எங்ஙனமெனின், நமக்கு முன்னொன்று காணப்பட்ட காலம் தேச வஸ்துக்களை இன்னொன்று உணர்ந்தோறும் தோன்றுகின்றனவா? இல்லையா? தோன்றுகின்றனவெனின், அங்ஙனம் தோன்றுவது முன்னொன்று காணப்பட்டவைகளா? அன்றி வேறாக இருந்து தோற்றுகின்றனவா? முன்னொன்று காணப்பட்டவைகளே இன்றொன்று தோன்றுகின்றனவெனின், அங்ஙனம் தோன்றுகின்றனவைகளுள் ஒன்றைப் பற்றிப் பேசுவாம். அதாவது:—இப்பர்வதமொன்று இந்நிலையமாக நின்றிருப்ப நமக்கு, அணிமைக்கண் வந்த துண்டா? அன்றி அதன் அணிமைக்கண் நாம் போனதுண்டா? இல்லையே! ஆகலின், பர்வதமாகத் தோற்றுவதியாது? முன்னொன்று காணப்பட்டதைப் போலவே தோற்றுகின்றதெனின், இப்பர்வதத்தைப் போல் அண்டாண்ட சராசரங்களனைத்தும் தோற்றமாத்திரமாகக் காணப்படுகின்றனவல்லவா! இவையனைத்தும் எங்கே காணப்படுகின்றன? நினைவிற் காணப்படுகின்றன வெனின், அந்நினைவு எத்துணைத்தாயிருக்க, இவ்வண்டாண்ட சராசரங்களும் காணப்படுகின்றன? அகண்டமாயிருக்க அதன்கண் காணப்படுகின்றனவெனின், அவ்வகண்டம் வெளியெனப்படுமன்றோ? எங்ஙனமெனின், இப் பர்வதம் தோற்றுகின்றது, உயரத்திலும், நீட்சியிலும், அகலத்திலும் இத்துணைத்தென இருக்கின்றதல்லவா? இங்ஙனம் இக்கணிதமுற் றிருக்கின்ற இப்பர்வதம் தசபுறமுற் றிருக்கின்றதன்றோ? இத்தசபுறங்களிலும்,

யாதிருக்கின்றது? ஒன்றுமில்லாமையெனின், அவ்வொன்று மில்லாமையன்றோ வெளியெனப்படுவது? இப்பார்வைதத்தின் தசபுறத்துள் ஓர் புறத்திலுள்ள வெளியை, நமதகத்திருட்டி யானது நாடிச் செல்லச் செல்லச் சேய்மையுற்றுப் போகுமன்றோ? சேய்மையுற்றுச் சென்றும் அவ்வெளிக்கு முடிவு எட்டுகின்றதா? இல்லையன்றோ? இங்ஙனமே அவ்வொரு புறமுமிருக்கின்ற அவ்வெளிக்கு முடிவு எட்டவில்லையன்றோ? எட்டாதுழி, அஃது எல்லை யற்றிருக்கின்றதன்றோ? இதனால் அவ்வெளியானது கிழக்கு மேற்கு முதலியனவாக வழங்கப் படுகின்றதா? இல்லையன்றோ? அஃது எங்ஙனமெனின், இது தான் கிழக்குத்திசையெனச் சுட்டிய இச்சுட்டிய தற்கிலட்சியம் எதுவெனப்படும்? அதற்குக் கீழையும் மேலையும் வழங்கப்படுவது இயைந்ததன்று. அவ்விரண்டிய திக்குகளாகமினைன்க. ஷை கிழக்குத் திக்கு எனவும் சுட்டிக்கு இலட்சியம், இவ்வெளியையன்றி யுண்டோ? இன்றாகலின், இங்ஙனமே தசவித திக்குகளுக்கும் இலட்சியம் இவ்வெளியையன்றி யின்றென்பதாயிற்று. ஆகவே, இவ்வெளியானது எந்த திக்குக் கியைந்தது? தசதிக்குக்கும் இயைந்ததெனின், ஓர் திக்கு மற்றோர் திக்கு எனப்படாததுபோல, ஓர் திக்குவெளி மற்றோர் திக்கு வெளியெனப் படாதிருக்கவேண்டுமே? அங்ஙனமில்லையே! எங்கும் ஏகவெளியா யிருக்கின்றதே! எங்ஙனம் ஷை கிழக்கு முதலிய தசவித திக்குகளை யேற்கும்? புறமென்பதையேலாத இவ்வெளியானது உள் ளென்பதை ஏற்றுக் கியைகின்றதா? இன்றாகலின், உள்ளும் புறமுமற்றிருக்கினும் இடைப்புறமேனும் ஏற்றிருக்கவேண்டுமே! அஃதுமில்லையே! ஏனெனின், நிரந்தரமுற்றிருக்கின்றதாலென்க. அம்முப் புறமும் அற்றிருக்கின்றதாயின் ஷை நிலைவாகிய இவ்வெளி ஆதிமத்தியாந்த ரகிதமெனப் படுமன்றோ? இதனை உற்று நோக்குழியன்றோ இஃதுண்மையென்றும் அன்றென்றும்

விளங்கும்? அங்ஙனம் நோக்காதொழி, இஃது ஓர் கதைபோலும்! இங்ஙனமாகிய பரிபூரண வியாபகத்திலன்றோ ஷை தோற்றமாத்திரமாகிய இப்பர்வதம்போன்ற அண்டரண்ட சராசரங்களும் தோற்றுகின்றன? இங்ஙனம் தோற்றப்பட்டவற்றுள், இப்பர்வதம் தோற்றுஞான்று ஏனைய நாமரூபங்கள் தோற்றுகின்றனவா? இல்லையன்றோ? மற்றவற்றுள் ஒன்று தோன்றுஞான்று இப்பர்வதமுண்டா? இல்லையன்றோ? இல்லையெனின், எங்கே போயிற்று? எங்கும் போகவின்றெனின், நசித்துவிட்டதன்றோ? நசித்துவிட்ட பின்ஞான்று அப்பர்வதம் யாது பொருளாய் முடிகின்றது? இல்லாமற் போய் விடுகின்றதெனின், இல்லாமையென்பது சூனியமன்றோ? அவ்வாறில்லாமையாகிற சூனியத்திற் காதாரமாவது இவ்வெளியேயன்றோ? அப்பர்வதம் வெளியாய்விடுகின்றதன்றோ? இஃது எதுபோலெனின், உப்பானது அப்பானதுபோலும், ஆலாங்கட்டி நீரானதுபோலும, அரவு கயிறானதுபோலுமன்றோ? இவ்வுப்பு முதலிய மூன்றும், நீரும் அரவுமானவாறெனின்? நீரும் கயிறும் அவ்வுபாதிகளாக ஆனமையால் மீண்டுமவைகள் தத்தமுபாதான காரணமாயாகின்றன. இவற்றைப்போல், ஷை பர்வதம் தனக்காதாரமாகிய வெளியாவானேன்? அவ்வெளியே பர்வதமாக ஸ்புரித்தமையால், மீண்டும் அஃது தனது உபாதான காரணமாயாகின்றது. அவ்வெளியானது ஷை கயிற்றரவுபோல், 'பர்வதமாக ஸ்புரிக்காவிடின், மீண்டும் எங்ஙனம் வெளியாகும். இப்பர்வதம்போல் மற்றோர் நாமரூபமும் தோன்றி, மீண்டும் வெளியாகின்றது. இங்ஙனமே அவ்வெளியின்கண் தோன்றும் அண்டரண்ட சராசரங்களும் தோன்றிய ஞான்று தோன்றி மீண்டும் வெளியாகவே முடிகின்றன. சலமானது தனது அகண்ட வியாபகத்தில்தானே ஏகதேசமாய் அலையாதிகளாக ஸ்புரித்து விளங்கி ஒடுங்கித் தானாய் முடிவதுபோல, இவ்

வகண்ட வெளியானது, தனது பரிபூரண வியாபகத்தின்கண் தானே ஏகதேசமாய் நான் நீ அவன் அவள் அது என்கிற திணை பாலிடமுதலிய அனந்த நாமரூபங்களாகப் பிரிந்து விளங்கி ஒடுங்கித் தானாய் அடங்கி நிற்கின்றது. இவையாவும் கண்கூடான அனுபவமன்றோ? இங்ஙனம் இருப்பதால், இத் தோற்றங்களாகிய சர்வத்துக்கும், இவ்வெளியாகிய தான் அகண்ட வியாபகமா யிருப்பதுமன்றி, உபாதான காரண மாயு மிருப்பது சத்தியமன்றோ? அன்றியும் அவ்வெளியாகிய தன்பால் சமட்டியாகவும் வியட்டியாகவும் காணப்படுகின்ற வைகள் எதற்கெனப்படும்? அறிதற்கெனின், அறியத்தான் காணப்படுகின்றன? தம்மை அறிகின்றதற்குக் காணப்படு கின்றனவெனின், இத்தோற்றங்களாகிய தம்மையறியு மறிவு எங்கிருக்கின்றது? இத்தூலசரீரத்தில் நின்றறிகின்றதெனின், இத்தூலசரீரம் முன்னொன்றாய் [illegible] யன்றி ஓர் முதலெனப்பட்டதா? இல்லையே! இல்லையாயின், மீண்டும் இத்தூலதனுவை ஓர் முதலெனக் கொண்டது அவ வாராய்ச்சி நெறிக்கமைவில்லாத அறியாமையினா லன்றோ? இவ்வறியாமையை மிக்க ஆபத்தாகத் தழுவி யிருக்குஞான் றும் நமது யதார்த்த வடிவம் கிஞ்சித்தும் வெளிப்படாதே! இதுநிற்க,

இஞ்ஞான்று காணப்படுகின்ற இப்பர்வதத்தை அறி கின்றது அறிவாகலின் அவ்வறிவு உருவம் அருவம் உருவா ருவமாகிய மூன்றில் எந்த சொரூபமாக நின்றறிகின்றது? அருவமாகநின் றறிகின்றதெனின், அருவமென்பது இப்பர் வதமுதலிய சர்வ தோற்றங்களுக்கும் ஆதாரமாகிய இவ்வெ ளியையன்றி இன்றெனை வருமே! வரின், அவ்வாதார வெளி யே இப்பர்வதத்தை அறிகின்றதென வருமே! வரின், அவ் வெளியானது தன்னை யறிகின்றதென வருமே! அங்ஙன

மன்றி உருவமாக நின்றறிகின்றதெனின், தோன்றுகிற இப்பர்வதம் உருவப்பொருளாக வேண்டும். உருவப்பொருளாயின், கட்புலன் முதலிய ஐம்பொறிகளுக்குந் தோன்றி அனுபவப்படவேண்டும். அனுபவப்படுகிறதற்கு நாம் இந்நகரத்தைவிட்டு அதன் அண்மைக்கண் போயிருக்க வேண்டும். அங்ஙனமின்றெனின், பர்வதம் தன் தானத்தை விட்டு நமது அண்மையகத்தில் வந்திருக்க வேண்டும். இங்ஙனமு மின்றெனின், எங்ஙனம் உருவவடிவமாக நின்றறிகின்றதெனக் கேட்டல்? உருவாருவ வடிவாக நின்றறிகின்றதெனின், இந்தோன்றுந் தோற்றமும் பர்வதம் உருவாருவமாகலின், நாம் உருவாருவமாக நின்றறிகின்றதென்பது பொருந்தும். பொருந்தமே, உருவாருவ வடிவமாக நின்றறிகின்ற அறிவு, எங்கிருப்பது? இப்பர்வதத்துக்கு ஆதாரமாகிய வெளியின்கண்ணெனின், இப்பர்வதம் சதுர்வித பக்கங்களுள், ஓர்பக்கம் தோன்றுகின்றதன்றோ? அங்ஙனம் தோன்றுகின்றது, எந்த பக்கமெனப்படும்? கீழண்டைப் பாரிசம் தோன்றுகின்றதெனின், அப்பாரிசத்தை அறிகின்றவறிவு, அப்பாரிசத்தில் நிற்கின்றதெனப்படும்? அக்கீழண்டைப் பாரிசத்திலெனின், அப்பாரிசத்தில அண்மைக்கண்ணுறைகவேனும், அன்றிச் சேய்மைக்கண்ணுறைகவேனும் நின்றறிகின்றதன்றோ? அங்ஙன மறிகின்ற அறிவுக்குச பொருடபம், உருவாருவ வடிவந்தானோ? ஆமெனின், அவ்வடிவம் பர்வதம்போன்ற உருவாருவமாகலின், தோற்றுகின்ற இப்பர்வதம் ஓர் முதலாக வேண்டும். அங்ஙனம் முதலாயின் இவ்வுருவாருவ வடிவமும் ஓர் முதலாகலாம். எங்ஙனமெனின், இஞ்ஞான்று இப்பர்வதத்தை அறியு மறிவுக்கு வடிவம் உருவாருவமாயின, சாக்கிரமாகிய இந்நனவில் காணப்படுகின்ற இவ்விருட்சத்தை யறிகின்றது எது? அப்பர்வதத்தை அறிந்தவறிவன்றோ. இவ்விருட்சம் உருவமா? அன்றி வேறு? உருவமாகலின், இவ்வுருவத்தை அறிகின்ற

அறிவும் உருவமாக விருக்கின்றது. நாமரூபங்களை இந்நிலையில அறியும் ஞான்று உருவமாவதாயும், அகத்தில் அதாவது நினைவின்கண் ௸ நாமரூபங்களை உருவாருவமாக அறியும் ஞான்று உருவாருவமாயும் நின்றறிகின்றது. இவவிரிடத்தும் அறிகின்ற வறிவுக்குச் சொரூபம் எங்ஙனமிருக்கின்றது? இவ்விரண்டுமா யிருக்கின்றதெனின், தான் உருவமாயிருந்து விருட்சத்தை அறியுஞான்று உருவாருவமேதுமும், தான் உருவாருவமாயிருந்து பர்வதத்தை அறியுஞான்று உருவமேதுமும் இன்றிப்போகின்றன. இங்ஙனம ஒன்றிலொன் றில்லாமற் போகின்றதால், அஃதனிப்போனிய பாவமென்ப ரறிஞர்கள். இங்ஙன மிருப்பதால், ௸ பர்வதத்தை அணிமையாகவும் சேய்மையாகவும் அறிவதுபோற் காண்பது தனது உருவாருவமே தடையாயதா லன்றோ? உருவாருவ வடிவம் தானன்றாயின், தான் இப்பர்வதத்தை அறிவது எங்கிருந்தெனப்படின்? ஆதாரமாகிய அவ்வெளியிலாக ணெனின், அவ்வெளிக்கண் இப்பர்வதம் போன்ற நாமரூபங்கள் எங்கெங்கே எவ்வெவ்வொன்று ஸ்புரித்துக் காணப்படுகின்றனவோ, அங்கங்கே அவ்வவ்வொன்று அறிகின்றது. அங்ஙனம் அறிகின்ற அறிவு உருவாருவமாமேபோல் ஆரோபிதமாக நின்றமையால் ஒவ்வோர் நாமரூபத்தையும் ஒவ்வோர் பாரிசத்தில் நின்றறிகின்றதாய்த் தோற்றுகின்றதே யன்றி, உண்மையில் அங்ஙன மில்லவே யில்லை. இல்லையேனும், அறிவது உண்மையாகலின் எங்கிருந் தறிகின்றது? அவ்வியாபகத்தில் எங்கெங்கே தோற்றுகின்றதோ, அங்கங்கே யிருந்தறிகின்றது. தோன்றாத ஞான்றும் தான் இருந்தே அத்தோன்றாமையையும் அறிந்துகொண் டிருக்கின்றது. இதனால் அறிவென்பது அவ்வெளி முழுதும் நிறைவென்பதாயிற்று. ஆகவே, அவ்வெளியை யன்றி அறிவென்பதுண்டா? இன்மையால், அவ்வெளியே தன்பாற்றோற்றுவன யாவையும் தானே

யறிகின்றது. இதனால் அவ்வெளியானது உணர்வெளி யெனவும், அறிவானது நிறையுணர்வெனவு மாகின்றது. இவ்வுணர்வெளியின்கண் தோற்றும் இப்பர்வத முதலிய சராசரங்களும் விளங்குவது யாதினாலெனப்படும். அதாவது விளக்கமெனப் படுவது. இச்சராசரங்களை விளக்குதற்கு அவ்வெளிக்கண் சோமசூரியாக்கினி யென்பவை யில்லையே! இல்லாமையால், எந்த விளக்கத்தால் இவற்றின் தோற்றங்களும் விளங்கப்படுகின்றன? அப்பிரகாசமாகிய விளக்கத்தா லென்பதற்கு மூரணின்றெனக் கூடும் விளக்கவுடைமை யிருக்க அவ்விளக்கம் விளங்காத தென்பதெனின், அஃது விளங்காதொன்று முண்டோ? ஸதோதயமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றதே! உருவும் உருவற்றதுமாகிய சராசரங்களாகப் பார்க்கும் பார்வையே அவ்விளக்கம் விளங்காதிருத்தற்குக் காரணமன்றி வேறன்றென்க. சராசரங்கள் தோற்றுவதும் அவற்றைப் பார்க்கும் பார்வையு மில்லாதொன்றேனும் அதாவது * பூர்த்தியவத்தை யெனப்படுவது. அவ்விளக்கம் விளங்கப் படுவதேமெனின், அவ்வுருக்களை அறிந்துகொண்டிருக்கும் ஞான்று சுருங்கிக அவ்வுருக்கள் மறைந்து விடுவதால், அம் மறைப்பாகிய பாழே ஆங்கு அந்த நாட்டத்துக்குப் பலனை விருக்கின்றது. அப்பாழாகிய பலனில் அறிவுவிளக்க மெங்ஙனம் தோன்றும்? உருக்கள் தோன்றுமன்றோ, அவ்வுருக்களை மித்தையாநுபவமாக்கித் தன்னை எட்டியுணர்ந்துழியன்றோ அம்மாறு விளக்கம் தெரியும். அங்ஙனம் அவ்வுழைப் பின்றி உருக்களையே பலனாக நாடுஞான்று உருக்களாகத் தோன்றும விர்த்திகள் இடையிடையே அயர்வுறுமன்றோ? அவ்வயர்வு உருக்களைப் பலனாக நாடிய நாட்டத்துக்கு யாதாய் முடியும்? பாழாய் முடியுமன்றோ! இதற்கு ஓரனுபவ திருட்டாந்தம் கூறுதும். எங்ஙனமெனின், இரவில் பலரும் சூழ்ந்து மிக்க வியப்புறும் ஓர் அரிய நாடக மேடைக்கணி

ன்று நடனமாடிவரும் பல வேடங்களும் விளங்குவதுயாதினு லென்பப்படும்? சுடர் பகல்வத்தி முதலிய ஒளிவியாபகத்தினு லன்றோ? அவ்வொளி வியாபகத்திற் றோற்றும் நாநாவிதங்க ளும், மிக்க பலனுக அதாவது இன்புருவாகத் தோற்றுவா னேன்? பலனுகப் பார்ப்பதனுலன்றோ? அங்ஙனம் பலனு கப் பார்க்கும் ஞான்று அப்பலன் அனைத்தும் ஒருங்கே கண த்தில் மாறியக்கண் ஷெ பார்வைக்குப் பாழே பலனுகத் தோன்றுமா? அன்றி அப்பலனுகிய வேடங்களை விளக்கி வைத்த ஷெ சுடர் முதலிய ஒளி பலனுகத் தோன்றுமா? பாழே பலனுகத் தோன்றுமன்றோ? ஷெ நாடக நடிக்கும் ஞான்று அவ்வேடங்களைப பலனுக நாடிய நாட்டத்தை விட்டு அவ்வேடங்களை விளக்கும் ஒளி வியாபகத்தை நாடிக் கொண்டிருக்கின் வேடங்கள் மாறியஞான்றும் மாறுஞான் றும் அந்நாட்டத்துக்குப் பலன் அவ்விளக்கத்தை யன்றி வேறுபலன் உண்டெனப்படுமோ? இதுபோல், இச்சகலாவத் தைக்கண் பலனுகத் தோன்றும் காலம் தேசம் வத்துக்களை நியதி களைந்து களைந்து செல்லின், முடிவிலிருப்பது வியாபக விளக்கமாகலின், அவ்விளக்கத்தை விடாதுழி, ஷெ காலம் தேசம் வத்துக்கள் மாறியஞான்றும் மாறுஞான்றும் நாட் டத்திற்குப்பலன் அவ்வொளியையன்றி வேறோர்பலன் உண் டெனப் படுமோ? படாததால், அவ்வியாபக விளக்கத்தை விடாது நாடிக்கொண்டிருப்பது மிக்க அவசியமாமெனக.

இஃதன்றியும், உயிராகிய ஒவ்வோர் போதத்துக்கும் நாட்டத்திரயம் உள்ளன. அவையாவன, ஏகதேச விகார நாட்டமென்றும், ஏகதேச சுயம்பு நாட்டமென்றும், அகண்ட சுயம்பு நாட்டமென்றுமாம். அவற்றுள் தோற்றல் மாத்திர மாக நிகழும் அலையாதிகளை நாடுங்காறும் ஏகதேச விகார நாட்டமும், இவ்வலையாதிகட்கு உபாதானமா யிருப்பது

யாதெனத் தூலமதியால் நாடாது சூக்குமமதியால் நாடுழி இருந்து வெளிப்படுதல் நீர்ப்பொருளாகலின் அந்நீர் சுயம்புப் பொருளாயினும், ஷை அலையாதி நாட்டம் தவிர்ந்த அவசரம் நீர்ப்பொருள் ஏகதேசமாகத் தோன்றுமல்லவா? ஏகதேசமாகத் தோன்றுவ தென்னெனின், அலையாதியும் அவ்வலையாதியை ஓர் முதலென நாடி இருந்த நாட்டமும் ஏகதேசக் கண்டத்துவமாகலின், இக்கண்டத்துவ நாட்டம் அகன்ற அவசரம அந்நாட்டம அகண்டமாயுள்ள நீர்ப்பொருளைக் கண்டத்துவமாக நாடுமன்றோ? ஆகலின், அந்நாட்டம் கண்டத்துவமென்பதற்கு முரணென்னை? இதனால் ஷை ஏகதேச சுயம்பு நாட்டமும், அந்நீர்ப்பொருளை ஏகதேசமாக நாடிய நாட்டம முதிர முதிர அந் நீர்ப்பொருள் ஆகாரப்படுதற்கு இடனாகு மன்றோ? அவ்வாகாரமும் முதிர முதிர நீர்ப்பொருளானது எத்துணைத்தாக விரிந்திருக்கின்றதோ அதாவது அகண்டமெனப்படுவது, அத்துணைத்தாக வியாபிக்குமன்றோ? அங்ஙனம் வியாபித்தலே அகண்ட நாட்டமுமாமெனக. இவற்றைப்போல், சொல் மாத்திரமாயும் தோற்றல் மாத்திரமாயும் தூலமுதலிய உபாதித்திரயங்களை நாடுங்காறும், ஏகதேச விகார நாட்டமும், இவ்வுபாதித்திரயங்களுக்கு உபாதானகாரணமா யிருப்பது யாதெனத் தூலமதியை நீக்கிச் சூக்குமமதியால் இவ்வுபாதித்திரயங்களைக் காரணகாரிய நெறித்தாக ஆராய்ந்து சென்றுழி இருந்து வெளிப்படுதல் அறிவாகலின, அதாவது ஞானமாகலின் அந்த ஞானம் சுயம்புப் பொருளாயினும், ஷை உபாதித்திரய பஞ்சகோச நாட்டம் தவிர்ந்த அவ்வவசரம், ஷை ஞானமானது அகண்டத்துவமாயினும் ஏகதேசமாகத் தோன்றுமல்லவா? ஏகதேசமாகத் தோன்றுவதென்னெனின், உபாதித்திரய பஞ்சகோசங்களும், இப்பஞ்சகோசங்களை ஓர் முதலென நாடி இருந்த நாட்டமும் ஏகதேச கண்டத்துவமாகலின், இக்கண்டத்துவ நாட்டம் அகன்ற

ஸ்த னெனப்படுமெனின்,இவ்விளக்கத்திற்குக்கூடஸ்தனென் பானேன்? ஷை தூல முதல் அவித்தைகாறும் சூக்குமம் சூக் குமமாக ஆராய்ந்து ஆராய்ந்து உட்சென்ற முடிவில் அதி சூக்குமமாய் வெளிப்பட்டு விரிந்த இரகசியப் பொருளாகலினு லென்க. இது அவத்தாத்திரய விலட்சணமாகலின், பிரத்திய காத்ம சொருபமு மெனப்படும். இப்பிரத்தியகாத்ம சொரு பம், ஒவ்வொருவரது உள்ளத்தையன்றி இன்றெனப்படு மோ? படாததால்,

**உத்தமவாதநூல்.**

> "உள்ளஞ் சுயஞ்சோதி யொவ்வொரு வர்க்குமெனி
> னுள்ளபடி காணும்வகை யோராதே - கள்ளமதக்
> கற்பனைய தாக்கியதைக் காணுவதோ நம்புலமை
> சொற்கடங்கார்க் கேதுயர்ந்தோர் சொல்."

என்றருளி யிருக்கின்றது. அவ்வவ் வுள்ளத்தின் கண்ணும காலம் தேசம் வத்துக்களாக விடாது உதிக்கின்றதும் விள ங்குகின்றதும் மறைகின்றதும் மறைந்தவை மீண்டும் அவ வுள்ளமாகின்றதுமா யிருக்கின்றதால்,

**ஞானவாசிட்டம்.**

> "எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண்பொருளு மிலதாகி
> வழுவிலாத விண்ணிடையே வந்துதோன்று மோவியந்தான்
> பழுதின்மேவுந் தனைத்தானே பாராநிற்கும் பலபொறியு
> நழுவுதுயிலி னுலன்றி நனவான்மேவுங் கனவொக்கும்."

என்றும் அருளி இருக்கின்றது. சிந்தையானது வியாபகவடி வென்பதற்கு உதாரணம்,

**ஞானவாசிட்டம்.**

> "தானுரு மிகநொய்தா மாகாயத்திற்
> சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானேகோட்டு

மாணுத வுலகமெலாந் தனதுசோதி
யாதலினு லதற்குவே றயலொன்றில்லை
நீநானுஞ் சகபேத வடிவந்தானு
நிற்கின்ற வதன்வடிவாய் நீங்காதென்று
நானுவாம் பொருட்புணர்வா னடந்ததாகு
நடக்கவிட மிலாமையினு னடவாதாகும்." என்றும்;

பாடுதுறை.

"பற்றற்று நின்றோமென் றூதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றூதேடா காளா
முற்றவு ணர்வேயென் றூதேடா காளா
முள்ளொளி யானேமென் றூதேடா காளம்." என்றும்,

"அஞ்ஞான காரிய மனைத்து மறவிட்டு
விஞ்ஞான மானேமென் றுந்தீபற
வெளியாகி நின்றோமென் றுந்தீபற."

என்றும் கூறியவாற்றாற் காண்க.

உபாதி சகிதமாக நின்று நிகழும் எண்ணரிய உயிர்களது உள்ளமானது அதாவது தத்தம் சிந்தையானது வியாபகமாகவும் உபாதானமாகவும் விளக்கமாகவும் நித்தியமாகவும் சாட்சியாகவு மிருக்கின்றது சத்தியமான அனுபவமா யிருக்க, அவ்வொவ்வோருயிரும் நான் நானென்பதற்குப் பொருள் இதையன்றி யாதிருக்கின்றது ? உயிர்கள் பலவாயினும் அவைகளுக்கு நானென்னும் இவ்வகம்பொருள் ஒன்றுயிருக்கின்றதன்றோ ! இவ்வொன்றையன்றோ எவ்வுயிரும் நான் நானென வழங்குகின்றன. அங்ஙனம் வழங்கும் இவ்வகம் பொருள் எவ்வுயிர்க்கும் பொருத்தமுற் றிருக்கின்றதாலன்றோ,

ஞானவாசிட்டம்.

"அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந்
தனவரத முரைப்ப தாகி

சுருதி யுத்தி அநுபவங்களால் அகப்பொருள் இங்ஙன மிருக்க, நாம் ஒவ்வொருவரும் சகல கிருத்தியங்களையும் எப் போகங்களையும் அநுபவித்துக்கொண்டு நான் நானென இவ்வாபாச போதங்களெழுந்தோறும் அவ்வாபோத நாட்டங்கள் அதிட்டான நானென்னும் ஆதார பரிபூரணபோதத்தில் விழ வேண்டாவோ? அன்றிக் கீழ்ப்பட்ட இவ்வாபாசத்திரயங்கள் மேல்வந்து விழவேண்டுமோ? அவ்வாதார பெரும்போதத்தி லன்றோ வந்து விழவேண்டும். அங்ஙனம் விழும் இந்நாட்டம் அபரோட்சத்தில் இது நான் இது நானெனவும், பரோட்சத்தில் அது நான் அது நானெனவு மாகலின், அபரோட்ச மாக விழுந்து பழுத்தவரை அவர்போன்றோர் மக்கடாமே அறிவுயரே யெனவுறுதியாகக் கொள்க. அன்றியும்,

குறள்.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற."

எனவும் மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது. இதனால் அப ரோட்சமாக அப்பியாசிப்பவர்கள் மனிதரெனப் படுவரெ னின், அவத்தாத்திரயங் கடந்து பரோட்சமாக அப்பியா சிப்பவர்கள் என்னவெனப் படுவர்? போலிமனிதரெனப்படுவ ரன்றோ? இவ்வப்பியாசிகளே போலி மனிதரெனின், அவத் தாத்திரயங்களில் கைப்பற்றலும் அயர்வுறலும் பரோட்ச அப்பியாசத்துக்குக் கிஞ்சித்தும் இணங்காமலும் கல்வி கேள்விகளிலேயே முற்றும் மிதந்திருப்பவர்கள் என்னவெனப்படுவரோ தெரிகிலம்! ஆகலின் ஒவ்வொருவரும் நாமரூபங்கள் நான் எனதாகத் தோன்றுந்தோறும் இவற்றை நான் எனதன்றென அகற்றியகற்றி ஷ்டி ஆதாரூப பெரும் போதத்தில் அபரோட்சமாக விழாவிடினும், பரோட்சமாகவேனும் தத்

தம் நாட்டம் விழுந்தழுந்த வேண்டுவதே திண்ணமாயின்? இவ்வாராய்ச்சிக்கண் இதனினும் கூறவேண்டுவது யாமறிகில மென்க.

முன்ஞான்று விடயமுதல் இஞ்ஞான்று இருப்பாகத் தேர்ந்த இச்சாட்சிகாறும் விரிந்து வந்த ஆராய்ச்சியைத் தொகுத்து யூகித்தல் எங்ஙனமெனின், சத்தமுதலிய ஐந்து விடயங்களும் எதற்குத் தோற்றுகின்றதெனை ஆராய்ந்துழி, அவ்வைந்து விடயங்களையும் பிறிதின் கிழமைகளாகக் கொண்டுணர்ந்துவரும் ஐம்பொறிகளெனத் தேர்ந்தன. அதனால், அவ்வைம்பொறிகளும் அறிவாயிற்று. ஆகவே, பின்ஞான்று அவ்வைம்பொறிகளையும் ஆராய்ந்துழி, அவைகள் அறியாமையாய் முடிந்தன. அதன் பின்ஞான்று அறிவென்ப தியாதெனை ஆராய்ந்து சென்றுழி, அஃது பொறிகளைப் பிறிதின் கிழமைகளாகக்கொண்டு உணர்ந்துவரும் அந்தக்கரணங்களெனத்தேர்ந்தன. அதனால்,அவ்வந்தக்கரணங்கள் அறிவாயிற்று. ஆகவே, பின்ஞான்று அவ்வந்தக்கரணங்களை ஆராய்ந்துழி அவைகள் அறியாமையாய் முடிந்தன. அதன் பின்ஞான்று அறிவென்ப தியாதெனை ஆராய்ந்து சென்றுழி அஃது அந்தக் கரணங்களைப் பிறிதின் கிழமைகளாகக் கொண்டுணர்ந்து வரும் சீவபோதமெனத் தேர்ந்தது. அதனால் அச்சீவபோதம் அறிவாயிற்று. ஆகவே, பின்ஞான்று அச்சீவபோதத்தை ஆராய்ந்துழி அஃது அறியாமையாய் முடிந்தது. அதன் பின்ஞான்று அறிவென்ப தியாதெனை ஆராய்ந்து சென்றுழி அஃது சீவபோதத்தைப் பிறிதின் கிழமையாகக் கொண்டுணர்ந்துவரும் ஓர் சாட்சிபோதமெனத் தேர்ந்தது. அதனால் அச்சாட்சிபோதம் அறிவாயிற்று. ஆகவே, பினஞான்று அப்போதத்தை ஆராய்ந்துழி, ஒளியை விளக்குதற்கு வேறோர் ஒளி இல்லாவாறுபோல், அஃது சாட்சியைவிளக்கி உணர்தற்கு

வேறோர் உணர்வு கிஞ்சித்துமின்றித் தான் மாத்திரமாக நின்று ஷை விடயமுதல் சிவபோதமாகிய அவித்தைகாறுமாக நிகழும் அறிவறியாமை அடுக்குப் பேதங்களை ஒருங்கே தோய்ந்தும் தோயாதுமாய் அவை அனைத்திற்கும் சாட்சியாய் நின்று தன்னைச் சிற்பிரகாசமாயுணரும் உணர்வுவடிவே ஷை அறிவறியாமை ரஹித அகம்பொருளாகவே முடிந்ததென்க. இதனால் என்னை ஆயிற்றெனின், அறிவுக்குமேல் அறிவிருக்கின்றதென்னும் ஆகமபட்சத்தைப் பூர்வபட்சமாக்கி, ஷை விடய முதல் அவித்தைகாறுமாக நிகழும் அறிவறியாமை அனைத்துள் ஒன்றேனும் தானன்றெனவும், தன்னையன்றி அவற்றுள் ஒன்றேனு மின்றெனவுமாகித் தானே தானாயிற்றென்க. தானே தானாயிருத்தல் இயற்கையாயின், இடை நின்று அறிவறியாமைப் பேதம் வந்ததென்னையெனின், இஃது கயிற்றின்கண் அரவென்பது வந்ததென்னையென வினவுவதுபோலுமென்க. ஷை விடயமுதல் சாட்சிகாறு முள்ளனவற்றிற் குதாரணம்.

## உபநிடதம்.

"சத்தமுத லைந்தனையும் பொறிகளறி யும்பொறிக
டம்மைத் தானு
மொத்தகர ணமதறியுங் கரணத்தை யறியுமுயி
ருயிரைத் தானு
நித்தியா யிருந்தறியுஞ் சாட்சியகண் டாகார
நீங்கி மேலா
யித்தனையும் பகுத்தறியு மறிவுவடி வாயிருப்ப
தியல்ப தாமே." என்றும்,

"விடயமறிந் திடும்பொறிகள் விடய மாமோ
மிக்கபொறி யறிகரணம் பொறிக ளாமோ

வடையவறி சிவனாதக் காணை பாபா
வதனையறிந் திடுஞ்சாட்சி சிவ றேப்பா
தடையறவொன் றினையறியு மொன்று மேலொடு
சாட்சியையொன் றறிதற்கு தகவோ தாறு
யிடையறான் றிவைமெய்யொளி யதகை சான்ட்
கேதண்டா மதுவாகி யிருந்து காணை.

எனக் கூறியவாற்றுற் காண்க.

ஐந்தாவது

கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த விளக்கம்

முற்றிற்று.



# ஆறாவது

# அநவஸ்தாதோஷ ஆராய்ச்சி விளக்கம்.



## வெண்பா.

"அறி... [illegible] ...யின் மேலறிவொன் [illegible] ...ண்டென்
[illegible]
[illegible] ...வொன் [illegible]
...றிவென்னை [illegible] ...யாகு."

[illegible] ...அறிவைக் கூறியது உண்மையாய் [illegible] ...முதலிய அரிய நூல்களில்,

'காணு மறிவுங் காட்டறிவு மாவதற்குக்
காரணக் கருவுங் [illegible] - காணி
[illegible] ...நான் [illegible] ...தே
[illegible] பாப.'

எனக் கூறியிருப்பதா லெனெனின் அங்ஙனம் கூறியதன் கருத்தைப் பற்றி நன்கு விளக்குதும். எங்ஙனமெனின், அறிவென்பதற்குமேல், வேறோர் அறிவுண்டென்பது, முதலறிவு அறியுமறிவும் மேலறிவு அறிவிக்குமறிவும்ஆகின்றன. முதலறிவை யறிவித்தற்கு மேலறிவு ஒன்றிருப்பது போல, அம்மேலறிவை யறிவித்தற்கு மேலறிவொன் றிருக்க வேண்டுமன்றோ? மேலறிவை அறிவித்தற்கு மேலறிவொன் றில்லையெனின், முதலறிவை அறிவித்தற்கு மேலறிவொன்று இல்லையெனப் படாதோ? படாதெனின், முதலறிவுக்கு மாத்திரம் எங்ஙனம் மேலறிவு உண்டெனப்படும். அறிவென்பது, தனக்குச் சுசாதிகமும் விசாதிகமும் சுகதபேதமுமிருக்

கச் சம்மதித்ததாயின், அஃது அறியாமை யெனப்படுமா? இங்ஙனமிருக்க ஈரறிவென்பதில் எது அறிவெனப்படும்? எது அறியாமை யெனப்படும்? முதலறிவு அறியாமையும் மேலறிவு அறிவுமெனப் படுமெனின்; சிற்றறிவு பேரறிவு பேதமின்றாகின்றன. இருக்கின்றதால் ஒன்றறிவாயும் ஒன்றறியாமையாயும் எங்ஙனம் ஏற்கப்படும்? முன்னொன்று சுசாதி விசாதி சுகதபேதம் மூன்றையும் அல்லாததே அறிவெனச் சம்மதித்திருக்க, பின்னொன்று முதலறிவாகிற அறியாமையிருக்கச் சம்மதித்ததென்னை? அவ்வறியாமை மேலறிவுக்கு விசாதிகமன்றோ? அன்றியும், சிற்றறிவு பேரறிவென்பதில் சிற்றறிவாவது முண்டன்றோ? அச்சிற்றறிவு சுசாதிபேதமன்றோ? இச்சுசாதிபேதம் பிரமன்முதல் பிபீலிகம் இறுவாயுள்ள எண்ணரிய கோடாகோடிகட்கும் மிஞ்சியிருக்கின்றனவன்றோ? அன்றியும், பஞ்சபூத பவுதிக முதலியனவாகத் தோன்றும் இப்பிரபஞ்சம் விசாதிபேதங்களன்றோ? முதலறிவு அறியாமையென்னின், இம்முதலறிவு எண்ணரியதாயிருக்கின்றமையின், விசாதிபேதம் அனந்த பேதங்களாயும், அங்ஙனமின்றி அம்முதலறிவு சிற்றறிவென்னின், அனந்த சுசாதிபேதங்களாயும் முடிகின்றன. முடிவதால் எங்ஙனம் மேலறிவென்றது அறிவெனப்படுமா? முதலறிவு அறிவாயின், மேலறிவாகிற சுசாதிபேதமும் பிரபஞ்சமாகிற விசாதிபேதங்களும் இருக்கலாமா? அன்றி, மேலறிவு அறிவாயின் முதலறிவாகிற சுசாதிபேதங்களும் பிரபஞ்சமாகிற விசாதிபேதங்களும் இருக்கலாமா? வத்துவெனப்படுவது ஒப்பும் உயர்வும் தாழ்வு மற்றதன்றோ? இத்துணைத் தோடங்களிருக்க, அறிவுக்கு மேலறிவுண்டெனச் சம்மதித்து அறிவுக்கு மேலறிவு அறிவுக்கு மேலறிவெனச் சென்று சென்று ஈறின்றி அனவத்தாத் தோடமெய்துமே? இதற்கென்செய்தும்! இத்துணைக் கட்டங்களையும் நன்குணர்க.

சுசாதி முதலிய பேதங்களுக்குத் திட்டாந்தமாவது:— மரத்துக்குத் தன்போன்ற மரம் வேறாயிருத்தல் சுசாதியும், அம்மரத்துக்குக் கல் முதலியவை மாறாயிருத்தல் விசாதியும், அம்மரத்தின்கண் தளிர் இலை சாகை முதலியனவாய் விட்டு நீங்காது அடங்கியிருத்தல் சுவகத பேதங்களுமா மென்க. இவ்வாறே தாட்டாந்தமாவது அறிவென்பதற்கு மேலாக வேனும் தாழ்வாகவேனும் சமமாகவேனும் தனக்கொப்பாக வேறறிவு ஒன்றாகவேனும் பலவாகவேனும இருக்குமாயின் சுசாதியும், அவ்வறிவுக்கு அறியாமையும் பிரபஞ்சமும் வேறாயிருக்குமாயின் விசாதியும், அவ்வறிவு தான் சகுணமுற்றிருக்குமாயின் அஃது சுவகதபேதமுமா மென்க. இச்சுசாதி முதலிய மூன்று பேதங்களும் அறிவென்பதற் கின்றாகலின்,

**சசிவர்ணபோதம்.**

"மெய்ம்மையறி வல்லதயில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே." என்றும்,

**ஞானவாசிட்டம்.**

"பொருகடலிற் றிரைமுதலாப் பிறந்த வெல்லாம்
புனலாகி விளங்காமற் புழுதி யாமோ
வொருபொருளாம் பிரமமாத் திரமேயல்லா
லுபயமெனுங் கற்பனைப்பே ரொன்றுமில்லை
யெரியிடத்திற் சூடுமாத் திரமே யல்லா
லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றுஞ்
சரிதைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச்
சாதனங்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்."

என்றும் கூறியிருக்கின்றன.

ஓர் அறிவென்பதே சுவகதாதிபேத மிறந்திருக்கின்றதாயின், இரண்டாவதறிவு எங்ஙன மிருக்கும்? வேறாக ஓரறிவே யிருத்தற்கு ஏதுவில்லையாயின், எண்ணரிய அறிவென்பது

லையே! உயிர் இங்ஙன மகர்த்தத்துவமா யிருப்பதற்குத் தானே மேலெறிவொன் றிருக்கின்றது? "சும்மாவிருந்த தாரையை யூதிக்கெடுத்தானாண்டி" என்னும் பழமொழிக் கிணங்க, அநாதியாயுள்ள மாயைக்கண் அநாதியாக வாளாவிருந்த உயிரை வெளியி லிழுத்துவிட்டு இத்துணை கோலஞ் செய்துகொண்டு இன்னும் வருகின்றதென்பது பொருத்தமாக விருக்கின்றதா? அவ்விறைவன் தனது காருணியத்தால் இழுத்துச் செய்வித்ததேயன்றி விபரீதமாக வல்லவேயெனின், இக்கருணை உயிரின்மேல் இடையில் வைத்ததற்கு வருவதென்னை? அன்றியும், இக்கருணை வைத்திருத்தற்கு முன்னான்று இவ்வுயிர் என்ன நன்மை செய்தது? அங்ஙனம் ஒரு மாயைக்கண் தான் செய்யத்தக்க தகுதியாதொன்று மில்லையே? இல்லாவிடினும், எவ்விதத்திலோ நன்மை செய்து விட்டதாகவே வைப்போமெனின், அவ்வினை இறைவனது அநுக்கிரக சத்தியைச் சேர்ந்ததன்றோ? இதனால் அக்கருணை இடையில் வந்ததன்று. அக்கருணை இறைவனுக்கு அநாதியே இருக்கின்றதெனின், அவ்வியற்கைக்கருணை உயிரைப்பற்றியதன்றோ? அங்ஙனம் பற்றியிருக்குமான்று அநாதியிலேயே உயிர் விடுபட்டிருக்க வேண்டுமே! இன்மையால் அக்கருணை இயற்கையுமன்று செயற்கையு மன்று. இவற்றாற் கருணையென வழங்குவது விபரீதமென் றறியற்பாற்றென்க. இது நிற்க, சுருதியென வழங்குவது உளதாயின் அது சுருதிக்கொத்ததா? அன்றி ஒவ்வாததா? ஒத்ததெனின், அற்பசுருதிக் கொத்ததா? அன்றிப் பிரபல சுருதிக் கொத்ததா? பிரபல சுருதிக் கொத்ததெனின்,

**தாயுமானவர்.**

"சந்ததமு மெனதுசெய லினிதுசெய லியானெனுந்
தன்மையினை யன்றியில்லாத் தன்மையால் வேறலேன்
வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே." என்றும்,

## திருவாசகம்.

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்." என்றும்;

## சுந்தரமூர்த்திசுவாமிகள்.

"ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்
வானாய்நில னானாய்கட லானாய்." என்றும்,

## வைராக்கிய சதகம்.

"புகலரும்பாப் பிரமமாங் கடறனிற்
புணர்பவைத் திரையினை
சகமொடாருயி ரெனுநுரை யாதிக
டங்குமாற் றிடுமென்றே
பகருநான் மறையொளிநது நிலைதமையதை
பற்றுவாம் விங்கிற்பாரா
சுகசொ ரூபமே யனைத்து மென்றகற்றுந்
துவிதபா வனை மெற்றே." என்றும்,

## இதுவுமது.

"செய்யுநந்தொழி லைந்தொழி லியாவுமச
சிவனது வடிவென்றே
ஐயமற் றுணராதியா னெனுஞ் செருக்கடைந்து
நாடொறு நெஞ்சே, நைவதென்னை நீ." என்றும்,

## குறள்.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு." என்றும்,

இங்ஙனம் அநேக நூல்களும் இறைவனையன்றி உயிரின்றெனவும், வேறாகத் தோன்றினும் ஓர் முதலன்றெனவும், இங்ஙனமிருக்கும் உயிர் அவ்விறைவனு மன்றெனவும் கூறியிருக்கின்றவை அற்பசுருதிகளாக்கும்! அன்றியும், ஈரறிவென்

பது உளதெனச் சம்மதித்த ஷை சுருதிகள் இவ்வுலகானு பவத்துக் கிசைந்திருக்கின்றதே யெனின், ஈசுரனென்பது சுயம்பிரகாசமென்ற சுருதிக ளநுபவத்துக் கிசையாததாக்கும் ! இரண்டறிவெனக் கூறும் சுருதிகள் அநுபவத்துக் கொவ்வி யதேயிருக்கிற்கும் யுக்தி யிருக்கவேண்டுமன்றோ? அவ்யுக்திப் பிரமாணத்தைப் பற்றிச் சற்று விசாரிக்குதும். எங்ஙனமெனின், ஈசுரனென்ன சம்பந்தத்து வியஷ்டி சமஷ்டி உபாதி குணம் தொழில்களாலன்றோ? வியஷ்டி உபாதி குணம் தொழில்களை விடாமல் தனித்தனியாயிருக்கின்ற நாலுக்கும் காரணங்கள் உபாதிகளும், கருவிக்குறைவும், காமம் இராகாதி சேட்டை கள் தொழில்களுமாம். சமஷ்டி உபாதி குணம் தொழில்களை விடாமல் ஒரு சமயம் ஒருங்கு கூடியிருக்கின்ற நாலுக்கும் காரணங்கள் உபாதிகளும், அவைக்கேற்ற முதலியவை குண ங்களும், சிருஷ்டியாதிகள் தொழில்களுமாம். இவைகள் எங் ஙனமெனின், தனிமரம் வியஷ்டியெனப்படும் பலமரங்களின் சேர்க்கை சமஷ்டியெனப்படுமாம். தனித்தனியாயுள்ள விய ஷ்டி உபாதி குணம் தொழிலுக்கும் பிரமன் முதல் பிபீலிகை யீறாகிய உயிர்கள் வியஷ்டி சித்துப்பொருள் இருக்குமாறு போல, சமஷ்டியுள்ள சமஷ்டி உபாதி குணம் தொழிலுக் குச் சமஷ்டிச் சித்துப்பொருளொன்றிருக்க வேண்டு மன்றோ? அச்சமஷ்டியாகிய சித்துப்பொருள் ஈசுரனென வும், பேரறிவனெனவும், ஆண்டானெனவும் பொருள் படுகின் றது. வியஷ்டியாகிய சித்துப்பொருள் சீவனெனவும் சிற்றறி வெனவும் அடிமையெனவும் பொருள்படுகின்றது. ஷை விய ஷ்டி சமஷ்டியாகிய உபாதி குணம் தொழில்கள் ஈசுரனாகிய முதல்களுக்கா? அன்றி ஈசுரனாகிய முதல்கள் உபாதி குணம் தொழில்களுக்கா? உபாதி குணம் தொழில்களுக்கே ஈசுரனுக ளுமெனின், ஆழிக்கு விரலென்முற்போ லாகின்றது. அங்ஙன மாயின், ஆழியானது கைவிரலைக்கோடல் யாதுக்கு? ஆழியை.

கியதான் விரலால் அலங்காரமா யிருக்கக்காண்கிறது! இங்ஙனமே, ஷை இருவித உபாதி குணம் தொழில்களும் அவ்வறிவையுங்கொண்டு யாது செய்கின்றன? பந்தமுத்திகளைந்தசாதனங்களை இயற்றி அப்பந்தமுத்திகளைப் பொருந்துகின்றதும்? இவைகள் கிஞ்சித்தும் பொருந்தமாயிருக்கின்றனவா? இல்லையே. விரலுக்கு ஆழிபொன்றும் பொருந்தாமை. எங்ஙனமெனின், விரலானது ஆழியைக்கொண்டு தான் அலங்காரமாகுகின்றது. இதுபோல், சாரியைக்கும் உபாதி குணம் தொழில்களாகலின் அவ்வுபாதியாதிகளால் சீவறிவு பந்தமுத்திகளை எய்துதற்கும் பேரறிவு அப்பந்தமுத்திக்கதற்கும் பொருந்துகின்றன. அன்றியும், ஆழியையுடைய விரலுக்காயினும், இவ்வாழி விரலொன்றும் படாமைபோல, ஷை இருவித உபாதி குணம் தொழில்கள் சாரிபுக்கடாயினும் அவ்வுபாதியாதிகள் சாரியொன்றும் படாமைபோல். இங்ஙனம் அறிவுவேறும் அறியப்படும் உபாதியாதிகள் வேறுமாயின்றன.

ஆகவே இருவித உபாதி குணம் தொழில்களையும் நீக்கி, அறிவு இரண்டென்னும் பேதமிருக்கக் காட்டுகின்றையுமோ? சாரிவெனக் கொண்டது உபாதி குணம் தொழில் நோக்கத்திலேயா? அன்றி அறிவு நோக்கத்திலேயா? அறிவு நோக்கத்திலேயெனின், ஆகாய திருட்டியில் ஆகாயமிரண்டுபட்டிருக்குமாயின் அறிவு திருட்டியில் அறிவு இரண்டென்பதற்கு புரணின்று. கடோபாதி மேகோபாதிகள் திருட்டியில் ஆகாயம் இரண்டுபட்டதுபோ லிருப்பினும் இரண்டெனப்படுமா? படாதன்றோ? அதுபோல், வியட்டி சமட்டி உபாதி குணம் தொழில் திருட்டிகளில் இரண்டுபட்டதுபோ லிருப்பதால் இரண்டாயிற்றா? இல்லையே! இஃதிங்ஙனம் நிற்க.

### இஃது உயிர் பலவன்றெனல்.

உயிர் ஒன்றென்பதா? அன்றிப் பலவென்பதா? பலவென்பதுதானெனின், யாதினாலேற்றற்பாலது? உயிர்களினாலேயே யேற்றதெனின், உயிரைக்கண்டிழி யேற்றற்பாலதா? அன்றிக் காணாதழி யேற்றற்பாலதா? கண்டிழியே யேற்றதெனின், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி மூர்ச்சை மரணமாகிய இவ்வைந்தவத்தைகளுள் எந்த அவத்தையிற் கண்டேற்றது? அன்றியும், நாலவத்தைகளாகிய துரியம் துரியாதீதம் இரண்டுள் எந்த அவத்தையிற் கண்டேற்றது? ஐந்நாலவத்தையிற் கண்டது நால முதலிய உபாதித்திரயங்களையன்றி யில்லையே! நாலவத்தைகளிலோ காலதேச வஸ்து பரிபூரணாநந்த சுயம்பிரகாசத்தையன்றி இல்லையே! ஆகலின், உயிர்களைக் கண்டு பலவென் றேற்றதன்று. அன்றியும், உயிர்களைப் பலவென் றேற்றது ஒவ்வொன்றும் எத்துணை எத்துணையாக வேற்றது? உடற்றுணையாக வேற்றதெனின், எந்த உடலுள் எந்த உடற்றுணையாக வேற்றது? தாலவுடற்றுணையாக வேற்றதெனின், இத்தாலவுடலெத்துணையது? இஃது பருவத்துக்குத் தகவா யிருக்கின்றதே? அப்பருவபேதங்களில் இஃதெப்பருவத் துணையது?

### திருவாசகம்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்."

என்று திருவாய்மலர்ந்தருளியதை ஏற்றற்பாலதாகலின், இப்பல பிறவிகளுள் எப்பிறவித்துணை யென்பது? அவ்வப் பிறவியும் ஒவ்வோர் பருவத்துணையா யிருக்கின்றதே! அவற்றுள் அவ்வவ்வுடல் எத்துணை யெனப்படும்? உடற்றுணை எத்துணை எத்துணைத்தாயினும் உயிர்கள் அணுத்துணைத்தாகலின் அவ்வவ் வுடல்களுள் ஏகதேசமாக நின்று இச்சா ஞானக் கிரியைகள் இயற்றி இயற்றி வருகின்றன. அங்ஙனம் இயற்றி வருகின்றது ஓர் அறை வீட்டின்கண் ஏகதேசமா யிருக்கும் ஓர் சிறிய தீபமானது அவ்வீடு முழுதும் பொருள்களை விளக்குவதுபோல வெனின், அவ்வறையி லிருந்த தீப தனக்கணிமைக்கண் ஒளி மிகுதியாயும் சேய்மைக்கண் சுருக்கமாயும் இடைக்கண் சமமாயும் விளங்குகின்றது.

அதுபோல் உடம்புகள்தோறும் ஏகதேச மேகதேசமாய் நிற்கும் உயிர்களின் உணர்வு தத்தமது அணிமைக்கண் மிகுதியாயும் சேய்மைக்கண் மழுக்கமாயும் இடைக்கண் சமமாயுமிருந்து விளங்கவேண்டுமே! அங்ஙனமன்றே! பரிவுணர்வில்லாத இடமும் உண்டோ! தேகமுழுதும் வியாபித்து நின்றுணர்வது ஒருபடித்தா யிருக்கின்றதே! உடலினுட்புற பரிசவுணர்வின்கணன்றோ? எங்கெங்கே பரிசவுணர்ச்சியின்றோ அங்கங்கே அவயவத்தேக மிருக்கட்டும். அன்றியும் உயிர்கள் அணுத்தன்மை யென்பது இயற்கை யெனப்படுவதா? அன்றிச் செயற்கையெனப்படுவதா? செயற்கை யெனப்படுவதெனின், உயிர்கட் கியற்கையது யாதெனப்படும்? வியாபகத்துவமெனின், அவ்வியாபகம் இடையில் அணுத்தன்மையாக வேண்டுவதின்று. அன்றியும், அவ்வியாபகம் அணுத்தன்மை யானதாகவே வைத்துக்கொள்வம். அணுத்தன்மைக்கு முன்ஞான்றிருந்த வியாபகங் கெட்டு அணுத்தன்மை யாயிற்றா? அன்றிக் கெடாதாயிற்றா? கெட்டே யாயிற்றெ

னின், மீண்டும் வியாபகமாகா திருக்கவேண்டும்? மீண்டும் வியாபக மாகாதாயின், பரத்தோடுகலந் தேகமாதற்குக் கூடாதே! வியாபகங் கெடாமலே அணுத்தன்மை யாயிற்றெனின், வியாபக மிருந்தவா றிருக்கின் அஃதெங்ஙனம் அணுத்தன்மை பெறும்? கயிறானது அரவுத்தன்மை பெற்றதுபோலாகும்! இடைக்கண் அணுத்தன்மை வந்ததென் றேற்கின், அவ்விடைக்கண் வியாபகத்துவம் இன்றென்பதாகிப் பின்னொன்று பரத்தோடு கலக்காத தோடம் வாய்க்குமெனக் கருதி அவ்வணுத்தன்மை இயற்கையதென் றேற்கினும், பரிபாக முதிர்ச்சி வந்த பின்னொன்று பரத்தோடு கலத்தலே யேலாததுடன் கிஞ்சிஞ்ஞத்துவமும் இயற்கையதெனப்படும். அஃதியற்கையதாயின், திரிகால ஞானமாகிற சர்வக்ஞத்துவம் இடைக்கண் வாராதிருக்கவேண்டுமே! அந்த ஞானம் தவத்தால் வருகின்றதெனின், தவத்தாலேயும் இடைக்கண் வருகின்றதால் கிஞ்சிஞ்ஞத்துவம் இயற்கை யென்பானேன்? இதுநிற்க.

உயிரென்பது அருவப்பொருளா? அன்றி உருவப்பொருளா? அருவப்பொருளெனின், அருவம் உருவ உபாதிக்குட் கட்டுப்படுவது முண்டா? படுவதுண்டெனின், அருவமாகிய இவ்வெளியானது எந்த உருவ வுபாதிக்குட் கட்டுப்பட்டது? இவ்வெளி சட அருவமாதலிற் கட்டுப்படுதற் கியையாது, உயிர் சித்துருவமாதலிற் கட்டுப்படுதற் கியையுமெனின், அவத்தாத்திரயம் உபாதித்திரயம் அபிமானத்திரயம் முதலியவைகள் எதன்பால் மாறி மாறிக் காணப்பட்டுக்கொண்டு வருகின்றன? எங்ஙனமெனின், தூலபாவந் தோன்றிய ஞான்று விசுவனென்கிற அபிமானியும் சாக்கிராவத்தையுந் தோன்றுகின்றன. அம் மூன்றும் தோன்றுஞான்றும் ஏனைய சூக்குமோபாதியும் தைசதனென்னும் அபிமானியும் சொப்

பஞவத்தையும் காரணோபாதியும் பிராக்ஞனென்னும் அபிமானியும் சுழுத்தியவத்தையும் இன்று. அச்சூக்குமோபாதி முதலியவைகள் தோன்றும் ஞான்றும் ஒழிந்தாலும் விசுவன் சாக்கிரம் இம்மூன்றும் இன்று. இவை யனைத்தும் எங்கே உளதாயு மிலதாயும் தோன்றி மறைகின்றன? இங்ஙனந் தோன்றி மறையு மனைத்தும் சங்கற்பமாகிய நினைவெழுச்சிகளன்றோ? இவ்வெழுச்சிகள் நானென்பதி னின்றே யாம்; அந்த நானென்பது ஒழிந் தோன்றி மறைபவைகட்குச் சாட்சியைத் தன்னியமன்றோ? இங்கே ஓர் வியட்டி உபாதி குணந் தொழில்களுக் காதாரம் நானென்னும் சாட்சியைத் தன்னியம் ஒன்றிருப்பதுபோல ஆங்காங்கும் எண்ணரிய வியட்டி உபாதி குணம் தொழில்களுக்கும் ஆதார சாட்சியைத் தன்னியங்களும் வெவ்வேறா யிருக்குமன்றோ? அவ்வாதார சாட்சியைத் தன்னிய மனைத்தும் ஒன்றெனப்பட்டதா? அன்றிப் பலவெனப்பட்டதா? பலவெனப்பட்டதெனின், ஒரு நானென்னுமோ தாதாரத்திற்கு எல்லை எத்தனையென்று ஏற்கப்பட்டது? கடோபாதிக ளனைத்தும் அகன்றழி, அவைகள் கடங்கடோறும் துண்டு துண்டாக முன்னின்று காணப்பட்ட வெளியென்பது பலவா யிருக்கட்டுமே நானென்பது பலவாயிருக்க ஆங்காங்கும் அவத்தாத்திரய முதலியனவாகத் தோன்றும் விகார திருட்டிக ளகன்றழி, அவ்வவ் வவத்தாத்திரயங்கள் தோறும் தனித்தனி வெவ்வேறாக முன்னின்று காணப்பட்ட நானென்னும் ஆதாரமென்பது பலவா யிருக்கின்றதா? ஓர் வகுப்பாகிய அலையாதிகட்கு எந்த சலப்பொருள் ஆதாரத்துவமா யிருக்கின்றதோ அந்த சலப்பொருள் ஒன்றேயன்றோ பல வகுப்பாகிய அலையாதிகட்கும் ஆதாரமாகியது: பலவகுப்பு அலையாதிகள் எழுச்சியினாற் சலாதாரம் பலவாகுமா? ஆகாதன்றோ? அலையாதிகளாகிய ஆதேயங்களோடு சலாதாரமும் ஒருங்கே விளங்குவதால் இச்சலாதாரமானது

ஏகத்துவ மென்பதற்கு இழுக்கின்று. ஆங்காங்கும் சலப் பொருள் விளங்காமலும் அதனைப் பாராமலும நின்று அலையாதிகளையே திருட்டிக்குக்கொண் டிருக்கில் இச்சலாதாரம் பலவாகத்தானே மயங்கிக்கொண் டிருக்கவேண்டியது? மயங்கினும் மயங்காவிடினும் இச்சலாதாரம எஞ்ஞான்றேனும் பலவென்பதற் கியையுமா?

இதுபோல், ஓர் வகுப்பாகிய அவத்தாத்திரய முதலிய கற்பனைகட்கு, எந்த நானென்னும் போதம் ஆதாரத்துவமாயிருக்கின்றதோ அந்தப் போதாதார மொன்றேயன்றோ பல வகுப்பாகிய அவத்தாத்திரய முதலியவைகட்கும் ஆதாரமாகியது? பலவகுப்பாகிய அவத்தாத்திரய முதலியவைகளின் எழுச்சியினால் அந்தப் போதாதாரம பலவாகுமா? ஆகாதன்றோ! அவத்தாத்திரய முதலிய அதிசயங்களோடு அந்தப் போதாதார [illegible]யும் விளங்காமையினால் அவ்வாதாரம பலவாயிருப்பதுபோல் இருக்கின்றது. ஆங்காங்கும் அந்தப் போதமானது விளங்கவும அதைக்காணவும நின்று இவ்வவத்தாத்திரய முதலியவைகளைத் திருட்டிக்கா திருந்திடில் அந்தப் போதாதாரம் பலவென மயங்கவேண்டி வருமோ? மயங்கினும் மயங்காவிடினும அந்தப் போதாதாரம் பலவெனப்படுமா? படாதன்றோ! அந்தப் போதாதாரம் ஏகமெனப்படுவது கற்பனைகளாகிய அவத்தாத்திரய முதலியவற்றா லாகலின், ஆரோபமுடாமென்க. இங்ஙனமிருப்பதால் பலவென்பது எஞ்ஞான்றும இன்றென்ப தாயிற்று.

அன்றியும் நானென்னும் போதப்பொருள் பலவாயின் இருவித சமாதிக்கண் ஏகமா யிருப்பானேன்? அதனால் அந்த நானென்னும் போதப்பொருள் ஏகமாயின் ஈங்குப் பலவா யிருப்பானேன்? ஆங்கு ஏகமாயும் ஈங்கு அனேகமாயும் இருப்

பது யாதுகாரணம் பற்றி? நிருபாதிகமான ஞானன்று ஏகமாயும் சோபாதிகமான ஞானன்று அநேகமாயும் இருக்கின்றதெனின், சோபாதிகமாகிய அஞ்ஞானதிசைக்கண் போதம் அநேகமென்பது அனுமான அளவையினாலன்றோ. போதமானது தன்னைப் பிரத்தியட்சமாகக் கண்டு அநுபவிக்கமாட்டாதது சமாதிகளாகிய ஞானதிசையினின்றோ? அந்த ஞானதிசைக்கண் அப்போதம் பலவாயிருக்கட்டுமே! இதனால் அஞ்ஞானதிசைக்கண் ஏகமாயிருக்கட்டுமே! அங்ஙனமில்லையே! பலவென்பது அஞ்ஞான திசைக்கண்ணும் ஏகமென்பது ஞானதிசைக்கண்ணு மாகின்றன. இத்திசைக்கண் பலவெனபது அவித்தாத்தியப் பிரதிவிம்ப கற்பனைகளாலாகலின் இதற்பனைகளைக் கொண்டு போத ஆதாரம் பலவெனக் காண்பது தோற்ற அனுமானமன்றே? ஆகலின், போதம் பல ஆதாரபேதங்களாக நிற்றல் அநேகமாகிய அபிராயமும், அப்போதம் ஏகமாக நிற்றல் ஆதாரமாகிய அதிட்டானமுமாயிற்று. ஆகவே, தனித்தனி ஆதாரசாட்சிகளைத் தன்னிடங்கட்டு மேல் சர்வாதாரசாட்சியை தன்னிடமே போதமெனப்பட்டிருத்தலின் வியட்டி சமட்டி அவித்தாதிரயாக்த ஆரோபச் சிற்றறிவு பேரறிவென்பவை எஞ்ஞான்றுமுள இன்மெய்ப்பாதாயிற்றென்க. இவற்றிற் குதாரணம்:—

**கைவல்லிய நவநீதம்.**

“அறிவுக்கு மறிவுசெய்யு மறிவுவே றுண்டென்றெண்ணு
மறிவற்ற குதர்க்கமூடர்க் கனவத்தை பலமாத்திரும்.” என்றும்,

**வேதாந்த சூளாமணி.**

“சீவனுடை சன்கூடத் தன்பிரம மென்னச்
சித்துநான் காங்கடநீர்க் கதுவுறும்வெண் மீன்வான்

*றூவுபனி நீர்விம்ப வறுமிதா காசஞ்*
*சொற்கடா விசசின்றை காசமொடு மாவான்*
*மெய்மிமை யவற்றினுக்குத் திட்டாந்த முறையாம்.”*

என்றுங் கூறியவாற்றாற் காண்க.

ஆறாவது
துவைத சிதாரோப விளக்கம்
முற்றிற்று.



# ஏழாவது

# துவைத இன்பாரோப ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சிக்க ணின்ப மிரண்டென்னல்
சந்ததமும் போலிகளாத் தானைக—மந்தரிலாத்
தானெனத் தப்பொருடான் றங்கிடுமே திண்ணமுதா
யேறுகு மீங்கிதனுக் கேசு.

எங்ஙனமெனின், போதமென்ப தொன்றுமின், ஆ
போதத்தை மற்றோர் போதம அனைந்தாற்றி அமோபாத
ஆனந்தம் எங்ஙனம் வெளிபட்டு மனைமுறும்? ஒர் மொன்
பால் தனக்கிணையெதிராகும் காயகனின்றித் தன்னைத் தானே
தழுவி யணைந்து சுகிக்கக் கூடுமா? கூடாவாறு, அனையது ஆன
ந்தம் எங்ஙனம் வெளிபட்டு மனைமுறுமா? இகத்திலேனும்
பரத்திலேனும் இரண்டுபடாமல் இன்பமெழுச்சி என்பது
கிஞ்சித்தேனும் உண்டாகுமா? உண்டாகாதாகலின், போக
மென்பது இரண்டுபட்டே யிருக்கவேண்டுமெனின், தவமெ
ன்பது இரண்டெனப்படும். அவை காமியத்தவமெனவும் நிட்
காமியத்தவமெனவுமாம. இவ்விரண்டுள் காமியத் தவமாவது
தனக்கெனப்பொருள் கிஞ்சித்துமின்றி, அத்தியாசமாய்வந்து
வந்தடுக்கும் தத்தம் உடல்களை நான் நானெனவும் அவ்வவ்
வுடலைச் சார்ந்து வரற்பாலனவாகிய பெண்டீர்முதலிய உயிர்ச்
சார்பு பொருட்சார்புகள் அனைத்தையும் எனதெனவும் ஐய
முறாது சத்தியமாகவே கர்த்தத்துவம் போக்தத்துவமுற்று
நிகழ்ந்துவரும். இவற்றால் உண்டாம் இராகாதி துற்குணங்க
ளையும் மதுமாய்சாதிகளை அருந்தும் துராசாரங்களையும் தடு

யுற்றதா மெனின், அவ்விரண்டின்பமும் எவற்றின்பாலது? இகபரத்தின் பாலதெனின், இகபரமாவது சகமும் சிவமு மாகின்றன. சகத்தின்பாலது சிற்றின்பமும் சிவத்தின்பா லது பேரின்பமுமாம். அன்றியும், சிற்றின்பம் சகத்திற் கிடைக் கையதும் பேரின்பம் சிவத்திற் கிடைக்கையதுமாம். உயிர்கள் தமது காமியத்தவத்தாற் சகத்தின் சிற்றின்பத்தையும் நிட் காமியத் தவத்தாற் பரத்தின் பேரின்பத்தையும் பெறுகின் றன. அத்தவத்தைப் புரியாவழி அவ்வின்பத்திற் செல்ல வேண்டுவதின்று, சொல்லாவழி அவ்விரண்டின்பமும் அதனத தன் ஆதாரத்தில் நின்றும் பெயருமாயின், அவ்விரண்டின்பமு சகத்தின்பாலதும் அச்சகத்திற் பிறக்கையுடையதும் பரத்தின் பாலதும் அப்பரத்திற் பிறக்கையுடையதுமாயின், அவ்விரண்டி லொன்றிலேனும உயிர்களுக்கு என்னை சம்பந்தமாகின்றது? அதாவது சொந்தமில்லையே. இவற்றில் அவ்விரண்டின்பமும உயிர்கட்கியற்கையன்று பொருந்துமோ? அன்றியும், உயிர்கள் உலகப்பொருளாயின் உலகச்சிற்றின்பம் உயிர்களுக்கியற்கை யெனப்படும். அங்ஙனமன்றி உயிர்கள் பரமபொருளாயின் அப்பரப்பேரின்பம் உயிர்களுக்கியற்கையெனப்படும். இவ்வுல கும் அப்பரமும் உயிர்களல்லாதலின் இச்சிற்றின்பத்திற்கும அப்பேரின்பத்திற்கும் உயிர்களாகிய நாம வேறெனப்படுவ தே திண்ணமென்க.

இரண்டின்பத்திற்கும் நாம் வேறாகில் இவ்வுயிர்கள் எந்த இன்பத்தில் ஆறுதலுற்று நிலைத்திருக்கும்? பேரின்பத் தில் நிலைத்திருக்குமெனின், அவ்வின்பமும் இச்சிற்றின்பத் தைப்போல் உயிர்களுக்கு இரவலுற்றிருத்தலால் எங்ஙனம் அதில் நிலைத்திருக்கும்? சிற்றின்பம் நிலைக்காது மாறுவது இழிந்தோர்க்குங் கண்கூடா யிருக்கின்றது. பேரின்பம் இது போலின்றி என்றும் மாறாத்தகையதா யிருக்கின்றதேயெ

